[27th April 1960

**[After Lunch—3-30 p.m.]**

**VII.—MOTION UNDER RULE 21 (3) *RE* CHANGE IN THE ORDER OF BUSINESS.**

THE HON. SRI C. SUBRAMANIAM: Sir, under rule 21 (3) of the Assembly Rules, I move—

"That item 5, viz., The Legal Practitioners' (Madras Amendment) Bill, 1960 (L.A. Bill No. 6 of 1960), be taken up first."

The motion was put and carried.

V. GOVERNMENT BILLS—*cont.*

(3) THE LEGAL PRACTITIONERS' (MADRAS AMENDMENT) BILL, 1960 (L.A. BILL NO. 6 OF 1960).

• THE HON. SRI M. BHAKTAVATSALAM: Sir, I move—

"That the Legal Practitioners' (Madras Amendment) Bill, 1960 (L.A. Bill No. 6 of 1960) be taken into consideration."

கனம் சபாநாயகர் அவர்களே, வழக்கறிஞர்களைப் பற்றிய சட்டம் மத்திய பார்லிமெண்டினால் நிறைவேற்றப்பட்ட சட்டம். அந்தச் சட்டத்திற்கு நம்முடைய ராஜ்யத்தைப் பொறுத்த வரையில் ஒரு திருத்தம் செய்திருக்கிறோம். இப்பொழுது நான் கொண்டு வந்திருப்பது ஒரு சிறிய திருத்தமாகும். லீகல் பிராக்டிஷனர்ஸ் சட்டத்தின் 25-வது பிரிவின்படி வழக்கறிஞர்கள் ரிஜிஸ்டர் செய்யப்படவேண்டுமென்றால், அவர்கள் "என்ரோல்" ஆவதற்கு "பீஸ்" கட்டவேண்டும். வருஷா வருஷம் கட்ட வேண்டும். கன்யாகுமரி, செங்கோட்டை பகுதியிலுள்ள வழக்கறிஞர்கள் ஆயுள் பூராவும் முதல் கிரேடு பிளீடராக இருப்பதற்கு மொத்தமாக ரூ. 100 கட்டணமும், இரண்டாவது கிரேடு பிளீடராக இருப்பதற்கு ரூ. 50 கட்டணமும் செலுத்தியிருக்கிறார்கள். அவர்கள் மறுபடியும் வருஷா வருஷம் "ரென்யூவல் பீ" கட்டவேண்டியதில்லை. ஆனால் இங்கு இருக்கும் வழக்கறிஞர்கள் வருஷா வருஷம் "ரென்யூவல் பீ" கட்டவேண்டும் லீகல் பிராக்டிஷனர்ஸ் சட்டப்படி. அம்மாதிரி கன்யாகுமரி, செங்கோட்டை பகுதியிலுள்ள வழக்கறிஞர்கள் கட்டவேண்டிய அவசியமில்லை என்பதற்காகத் தான் இந்த திருத்த மசோதா கொண்டு வரப்படுகிறது. இதை கனம் அங்கத்தினர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER: Motion moved—

"That the Legal Practitioners' (Madras Amendment) Bill, 1960 (L.A. Bill No. 6 of 1960) be taken into consideration."

SRI T. T. DANIEL: Mr. Speaker, while supporting this Bill, I would like to point out one fact to the Government. Under section 25 of the Legal Practitioners' Act, 1879, First Grade and Second Grade Pleaders have to pay annually licence fees and the First Grade and Second Grade Pleaders of the Transferred Territory have already paid Rs. 100 and Rs. 50 respectively. According to this Bill under discussion, they need not pay the annual renewal fee. I would like to point out in this connection that for the last two years, those Pleaders have paid these fees annually. I therefore request that the amounts paid by them already may be refunded to the respective First Grade and Second Grade Pleaders.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: I no doubt appreciate the point raised by the hon. Member. But I am afraid we cannot give retrospective effect. After all, they have not paid much and so they should not expect to have a refund of this money.

27th April 1960]

**Mr. SPEAKER**: The question is—

"That the Legal Practitioners' (Madras Amendment) Bill, 1960 (L.A. Bill No. 6 of 1960), be taken into consideration."

The motion was put and carried and the Bill was taken into consideration.

Clause 2 was put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: Sir, I move—

"That the Legal Practitioners' (Madras Amendment) Bill, 1960 (L.A. Bill No. 6 of 1960) be passed."

The motion was put and carried and the Bill was passed.

## (4) THE MADRAS DISTRICT COLLECTORS' POWERS (DELEGATION) AMENDMENT BILL, 1960.

(L.A. Bill No. 15 of 1960.)

**The Hon. Sri C. SUBRAMANIAM**: Sir, I move—

"That the Madras District Collectors' Powers (Delegation) Amendment Bill, 1960 (L.A. Bill No. 15 of 1960) be taken into consideration."

கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதா கொண்டுவருவதனுடைய நோக்கம், ஜில்லாக்களிலே பல அபிவிருத்தித் திட்டங்கள் இப்பொழுது எடுத்துக்கொள்ளப்பட்டு வருகின்றன. அந்த அபிவிருத்தித் திட்டங்களுக்கெல்லாம் மேற்பார்வை அதிகாரியாக இருக்கக்கூடியவர் ஜில்லா கலெக்டர் தான். இதன் காரணமாக இன்றைக்கு ஜில்லா கலெக்டர்களின் வேலைப் பளு அதிகமாக இருக்கிறது என்பதை நாம் காண்கிறோம். அதுவும் இப்பொழுது இருக்கக்கூடிய ஜில்லா அளவை வைத்துக்கொண்டு ஜில்லா கலெக்டரே எல்லாக் காரியங்களையும் கவனிப்பது என்று சொன்னால், அது அநேகமாக முடியாத காரியமாக இருந்து வருகிறது. இதன் காரணமாக அபிவிருத்தி வேலைகள் கூட தாமதப்பட நேரிடுகிறது. தடைப்பட நேரிடுகிறது. இதைத் தவிர்ப்பதற்கு இரண்டு விதத்தில் தான் முடிவுசெய்ய முடியும். ஒன்று ஜில்லாவை இரண்டாகப் பிரிக்க வேண்டும், பெரிய ஜில்லாக்களை. இப்பொழுது இருக்கக்கூடிய நிலைமையில் அது ஒரு சாத்தியமான காரியமாகத் தெரியவில்லை. ஏனென்று சொன்னால், இப்பொழுது பல புதிய முறையிலே நிர்வாக அமைப்பை ஏற்படுத்த வேண்டும் என்று முயற்சி செய்து பஞ்சாயத்து சட்டத்தை இயற்றியிருக்கிறோம். பஞ்சாயத்து, பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் இவைகளெல்லாம் ஏற்பாடு செய்வதற்கு நாம் இன்றைக்கு முயற்சி செய்து வருகிறோம். ஜில்லாவை இரண்டாகப் பிரிக்க வேண்டுமென்ற ஒரு பிரச்னையை இப்பொழுது எடுத்துக்கொள்ள முற்படுவோமானால், நிர்வாகம் சீர்கெட்டுப் போய்விடுமோ என்ற அச்சம் ஏற்படுகிறது. ஆகையினால் தான் வேறு விதமாக இதை எப்படி தீர்ப்பது என்பதைப் பற்றி யோசனை செய்து, கலெக்டர்களுக்கு இருக்கக்கூடிய சட்டபூர்வமான அதிகாரங்களை வேறு ஒரு அதிகாரி ஏற்று நடத்துவதற்கு ஒரு வாய்ப்பு ஏற்படுத்தவேண்டியிருக்கிறது. இன்றைக்கு இருக்கக்கூடிய பல்வேறு சட்டங்களின் கீழ் கலெக்டர்கள்தான் சில அதிகாரங்களை செலுத்துவதற்கு அந்தச் சட்டங்களில் இடம் இருக்கிறது. இதை சர்க்கார் உத்தரவு போட்டு மாற்ற முடியாது. ஆகையினால்தான் ஜில்லா அளவிலே இருக்கக்கூடிய பல்வேறு பணிகளைப் பிரித்து, ஜில்லா ரெவின்யூ ஆபீஸர் என்ற ஒரு உயர்தர அதிகாரியை நியமித்து அவர்கள் பல காரியங்களை பார்த்துக் கொள்ளும்படியாக ஏற்பாடு செய்துவிட்டு, பாக்கி அபிவிருத்தித் திட்டங்களையும், மற்ற முக்கியமான காரியங்களையும் கலெக்டர்கள் பார்க்கவேண்டும் என்கின்ற முறையை ஏற்பாடு செய்வதற்காக சர்க்காருக்கு அதிகாரம் அளிக்க